வெளியீடு 1

# வேதங்களின் சிறப்பு



ஆசிரியர்

பண்டித. கு. கண்வண்யா

நன்னெறி நூற்கழகம்,

வேலூர்.

விலை ஒரு அணா

# தமிழன்னையின் காணிக்கை

---

தொன் மொழிச் சிலதின் தொன்மையத் தொன்றாய்
இன்பப் பொருளில் இனிக்கும் இனித்தாய்
மேனிப் பொலிவான் மேதினி மயக்கும்
வானிற் புரிதி வண்டமி ழன்னாய்!
வந்தேன்! வந்தேன் வாரிதி யன்பு
வலையினில் வீழ வன்மனன் வந்தேன் !!
வண்புகழ் மறந்து வஞ்சகம் கொண்ட
வலிமையை இழந்து வழி பட வந்தேன் !!!
தஞ்சம் புகுந்த தமியனே னென்னைத்
தள்ளவொண்ணாதுத் தனியருள் புரிவாய் !
நின் புகழ் மேனி நிகரிலாப் பூண்கள்
நிறைந்திடக் காண நினைத்ததென் னுள்ளம்
உன் மணங் கமழும் உயர்திரு நாடு
உவகைமீ மிக்கு உய்ந்திட உற்றேன்
அடியனின் பணியை அம்மை! நீ யேற்று
ஆட்கொண்டு அருள அருள் புரிவாயே!

பண்டித. கு. கண்ணையா.

# முன்னுரை

அன்பினானுருவ மற்றான் அண்ணலின் அருளினாலே
ஆர்வமோ டன்னை சேவை ஆற்றயாம் முன் வந்துள்ளோம்.

இந்நில உலகில் மக்கள் தோன்றிய காலமுதல் பல்வேறு மொழிகளுக்கும், மதங்களுக்கும் தன் பண்புகளை அளித்து வந்த பாவை தமிழணங்கின் பளிங்குருவுடலம் இக்கால நாகரிகநிலை முதிர்ந்த மொழிகளாலும், மதங்களாலும் பவிசிழந்து பரிதவிக்க அந்நிலையைப்பாங்குறச் செய்ய படித்த பல்லறிஞர் பணிசெயப் புகுந்ததைப் பார்த்த எம் மனம் பதரி பாரினில் நாமும் அப் பைம்பொன் மொழியாளுக்குப் பணி செய்ய வேண்டுமென பன்னெடுங் நாளாய் பதைபதைத் திருந்தது. "நன்னெறி நூற் கழகத்தார்" நன்றி கூர்ந்தளித்த நற்றவப் பயனாய் நாம் நம்முடைப் பணியை நானிலமதனில் நாட்டிடும் நற்பே றடைந்தோம். இனி எம் பணி இடையுறாதிருக்க இன்பத் தமிழை இனிய தம் தாய்மொழியாகக் கொண்டுள்ள தமிழ் மக்கள் தான் தயை புரிய வேண்டும்.

"ஆதியில் மனிதர்கள் தோன்றியபோது அவர்களுக்கு யாதொரு மொழியும், நாகரிகமும் இருக்கவில்லை; நாட்போக்கில் இயற்கையில் நடைபெறும் பல்வேறு காரியங்களைக் கண்டு தங்கள் அறிவின் துணையால் பிற்காலத்தில் அடையப் பெற்றனர்" என்ற பழங்கூற்றை தற்கால மதஉலகமேயன்றி விஞ்ஞான உலகமும் தவறென நிரூபிக்கிறது. "அறிவு, மனம் ஆகிய இரண்டு உட்புலன்களும் பிறிதோர் இடத்திலிருந்து யாதொன்றையும் பெறாதவரை இயங்காது, இக்காலத்திலும் ஓர் மனிதன் தன் பெற்றோர், தந்தை, உற்றார், நண்பர்களிடமிருந்து யாதொன்றையும் கற்றுக் கொள்ளாமல் தானாக ஒன்றையும் நினைக்கவோ, அறியவோ முடிகிறதில்லை. "அக்பர் காலத்தில் ஓர் குழந்தையை அதன் பிறப்பிலிருந்து தனித்த ஓர்

இடத்தில் எவ்வகையிலும் மனித நிலை உணராத வண்ணம் வளர்த்து வந்தபோது அதற்கு யாதொரு மனிதத் தன்மையும் இருக்கவில்லையென்பதை பரிக்ஷித்துப் பார்த்தனர். எனவே மொழியும், கலையும் ஆதிமனிதனுக்கு மனிதனல்லாத ஓர் பெரும் அறிவுச்சக்தி யிடமிருந்தே கிடைத்திருக்க வேண்டும்.'' என்று விஞ்ஞானிகள் கண்டுள்ளனர். அவ்வாதி மொழி வேத மொழி என்பதையும், ஆதிகலை வேதக்கலை என்பதையும் யாம் பிறிதோரிடத்தில் விளக்கிக் கூறுவோம்.

இஸ்லாம், கிருஸ்தவம், யூதம், பார்ஸி மதங்களும் மனித சமூகத்திற்கு ஓர் அறிவுநூல் கொடுக்கப்பட்டதென்பதை ஒப்புக்கொள்கின்றனர். ஆனால் அந்நூல் அவரவர்களுடைய மத நூல்தான் என்று கூறுகின்றனர். தற்காலப் பொது நோக்குடைய ஆராய்ச்சியாளர்கள் இதை மறுக்கின்றனர். ஏனெனில் இம்மதங்களெல்லாம் மனிதன் தோன்றிய வெகு காலத்திற்குப்பின்பே உலகில் தோன்றியவை. ஆகையால் இவைகள் மனிதனின் முதல் நூலாக இருக்கமுடியாது. சிறந்த ஆராய்ச்சியாளர்கள் ரிக், யஜுர், சாம, அதர்வ என்ற நான்கு பிரிவினைகள்கொண்ட வேதமே அம் முதல்நூலென்று கண்டு பிடித்துள்ளனர். உதாரணமாக ஜெர்மனி தேசத்தின் மாபெரும் தத்துவ சாஸ்திரியாகிய மாக்ஸ் மில்லர் என்பார்:—“மனித சமூகத்தின் முதற்புத்தகம் ரிக் வேதம்” என்று கூறுகிறார். மேலும் இக்கூற்றை தக்க ஆதாரங்களுடன் விளக்கிச்சொல்வோம்.

“அவ்வப்போது உலகப்போக்கை நாடி ஆண்டவன் பல நூற்களை வெளியிடுகிறார்” என்ற மற்ற மதத்தினர்களின் கூற்றையும் யாம் மறுக்கிறோம். காரணம், உலகனைத்தையும் படைத்து அதன் போக்கை வகுத்த ஆண்டவனுக்கு உலகப் போக்கனைத்தும் முன்பே தெரிந்திருக்கும். ஆகவே பூரண அறிவு படைத்த அவர் அற்ப அறிவினர்களைப்போல் அவ்வப்பொழுது புதிய அறிவைப் பெற்று மாறுதல் செய்ய முடியாது. ஆகவே ஆண்டவனை சர்வக்ஞர் = எல்லாம் அறிந்தவர் என்று ஒப்புக்கொள்ளும்

யாரும் இதைச் சரியெனக்கூறமாட்டார்கள். இதனாலும் வேதமே மனிதனின் முதல் அறிவு நூல் என்பது பெறப் படுகிறது.

கால மாறுபாட்டால் இம்மனிதனின் முதல் புத்தக மாம் வேதத்தில் பொதிந்து கிடக்கும் உலக அமைதிக் கும், மனித வாழ்க்கைக்கும் பயன் தரும் சிறந்த நீதி முறைகள் இன்று மக்களால் அறியப்படவில்லை. இதுவே இன்று உலகில் தோன்றியிருக்கும் இழி நிலை யனைத்திற் கும் காரணமென்று நாம் நினைக்கிறோம். எக்காலம் மக் கள் மறுபடியும் இவ்வேத தர்மத்தைப் பின்பற்றத்துடங்கு வார்களோ அக்காலம் உலகமே களிகடலில் மூழ்கியிருக்கு மென நம்புகிறோம்.

வேதங்களின் எல்லா சிறந்த கொள்கைகளையும் இச் சிறு நூலில் விளக்க முடியாது. ஆகவே இதில் மனித வாழ்க்கையைக் குறித்த சில சிறந்த கொள்கைகளை மாத் திரம் திரட்டி சுருக்கமாகத் தருகிறோம் தமிழன்பர்களின் பேருதவி கிடைக்குமானால் மற்றும் வேதங்களின் சிறந்த எல்லா விஷயங்களையும் வெளியிட முற்படுவோம்.

இங்ஙனம்: தங்களன்புள்ள,

பண்டித. கு. கண்ணையா

# வேதங்களின் சிறப்பு

மனிதன் தன் வாழ்க்கையில் இவ்வுலக, பரவுலக சம்பந்தமாய் எதையெதை விரும்புவான் என்பதை வேதம் விளக்கிக் கூறுகிறது :—

> ஆயு : ப்ராணம் ப்ரஜாம் பசும் கீர்த்திம்
> த்ரவிணம் ப்ரஹ்ம வர்ச்சஸம் மஹ்யம் தத்வா
> வ்ரஜத ப்ரம்மலோகம் (அதர். 19-71-1)

(பொ-ள்) ஆயுள், உயிர் வலிமை, மக்களுறவு, துணைப்பிராணிகள், புகழ்ச்சி, செல்வம், நல்லறிவு, வீடு (மோட்சம்) இவைகளை அளிக்கும் பொருட்டு நான் வேதத் தாயாரை வணங்குகிறேன்.

வாசகரே! மனிதனின் விருப்பங்களனைத்தும் இதில் திரட்டிக் கொடுக்கப்பட்டிருக்கின்றதா என்பதைக் கூர்ந்து நோக்குவீராக! மனிதனின் உள்ளத்தில் எழக்கூடிய விருப்பங்களனைத்தையும் கண்டு சொல்லும் இதைப்போன்ற ஓர் அறிவுவாக்கியத்தை உலகின் வேறு எந்த மத நூலிலேயும் காணமுடியாதென்பது திண்ணம். இனி இவ்வொவ்வொரு மனித விருப்பமும் எத்தகையது என்பதற்கு வேத ஆதாரத்தைக் காண்போம் :—

## ஆயுள்.

> சதாயுர் மன்னு சரதோ அந்தி தேவா யத்ர நஸ்
> சக்ரா ஜரஸாம் தனூநாம்
> புத்ரோ ஸோ யத்ர பிதரோ பவந்தி மானோ மத்ய
> ரீரிஷத ஆயூர் கந்தோ : (யஜுர் 25-22)

(பொ-ள்) அறிவாளிகளே! நாம் நூறுவருடங்கள் வரை, நம் உடல் கிழத்தன்மை அடையாதவரை, நம் மகன் தகப்பனாகும் வரை நாம் வாழ்ந்திருப்போம்.

இதனால், வேத விதிப்படி மனிதர்கள் பேரன் பேத்திமார்களைக் கண்ட பிறகுதான் மரிக்கவேண்டுமென்றும், கிழப்பருவம் 100-வயதுக்குப்பிறகுதான் தோன்றவேண்டுமென்றும் புலனாகிறது. ஆனால் இக்கால உலகம் வேத விதிகளின்படி ஒழுகாமையால் இந்நிலையை அடையப் பெற்றிருக்கவில்லை. வேதகால

மக்கள் குறைந்தது 100 வருடங்கள்வரை களிப்புடனே வாழ்ந்து வந்தனர் என்பதற்குச் சரித்திரச் சான்றுகள் உண்டு.

## செல்வம்



'யேக பாத் பூயோ த்விபதோ [illegible] த்விபாத த்ரி[illegible]
மப்யேதி பஸ்சாத்
சதுஷ்பாதேதி த்விபாதா [illegible]ஸம்பஸ்யன்
பங்க்தி ரூப திஷ்டமான: (ருக் 17.117-8)

(பொ-ள்) ஒரு பங்கு செல்வம் கொண்டவன் இரு பங்கின் வழியைத்தேடுகிறான்; இரு பங்கினன் மூன்று பங்கை நாடுகிறான். நாற்பங்கன் தன்னிலும் இரு மடங்கைத் தேடுகிறான்.

செல்வம் எப்படி மனித வளர்ச்சிக்குத் தேவை யென்பதை இம்மறைமொழி கூறுகிறது. "புத்தியுடனதுவொன்று நூறாகவே செய்து போதவும் வளர்க்கவேண்டும்" என்ற தமிழ் வாக்கு இதற்கு நேர்த் துணையாய் இருக்கவில்லையா? "வேதங்கள் கேவலம் பாரலெளகீக அறிவைத்தான் கொண்டிருக்கிறது" என்ற பொய்க்கூற்றுக்கு இது சிறந்த மறுமொழியாக இருக்க வில்லையா? இதனால் வேத விதியை அனுசரிப்பவர் தங்கள் செல்வ நிலையை உயர்த்திக்கொள்ள வேண்டுமென்பது புலனாகிறது.

## அறிவு விளக்கம்.

யாம் மேதாம் தேவகணா: பிதரஸ்ச உபாஸதே
தயாமாம் அத்ய மேதயாக்னே மேதாவினம் குரு
மேதாம்மே வருணோ ததாது, மேதாம் அக்னி:
பிரஜாபதி:
மேதா மிந்த்ரஸ்ச வாயுஸ்ச மேதாம் தாதா ததாது மே.
(யஜுர். 32-14-15)

(பொ-ள்) பரமா! தேவர்களும் பிதுர்களும் உபாசிக்கும் அறிவால் என்னை அறிவாளியாக்கு அவ்வறிவு, நீர், நெருப்பு, கடவுள், இந்திரன் (வானுலகம்) வாயு முதலியவைகளின் அறிவைத் தோற்றுவிக்கட்டும்.

தற்கால விஞ்ஞானிகள் தங்கள் திறமையால் கண்டதாகச் சொல்லிக்கொள்ளும் நீர், நெருப்பு முதலிய இயற்கைப்பொருள் களின் விசேஷஅறிவு எல்லா மனிதர்களாலும் அறிந்து

கொள்ளப்படவேண்டும் என்று மனித உலகின் பழைய நூலாம் வேதத்தில் காணப்படுகிறது. எனவே இவ்விக்ஞானிகளின் அறிவனைத்தும் வேதத்திலிருந்தே அறியப்பட்டதென்பது விளங்கி விட்டது. இவைகளின் விசேஷ விளக்கத்தைப் பின்னால் யாம் வெளியிடுவோம்.

## சமதர்மம்.

தேஹி மே, ததாமி தே, நிமே தேஹி நிதே ததே
நிஹாரன்ச ஹாரீ மே நிஹாரான் நிஹாரானிதே
(யஜுர். 3-50)

(பொ-ள்) நீ கொடு, நான் கொடுக்கிறேன் ; நீ நற்குணங்களையளி, நானும் அளிக்கிறேன், இதை நான் கோள்கிறேன், இதை நீ கோள்.

ரஷ்யர்தான் சமதர்மத்தைக் கண்டு பிடித்தனர் என்று சொல்லும் அன்பர்கள் இம்மறைவுரையை கவனிப்பார்களாக. அரசியல், மதவியல், சமூகவியல், பொருளாதாரவியல், ஒழுக்கவியல் ஆகிய எல்லா இயல்களையும் உள்ளடக்கி அனைத்திற்கும் பொதுவான ஓர் சமதர்மக்கொள்கையை இம்மறைமொழி எவ்வளவு அழகாகக் கூறுகிறது. "நீ உலகில் இதை ஏற்றுக்கொள், நான் இதை ஏற்றுக்கொள்கிறேன்", என்பதை சமதர்ம வாதியல்லாத எந்த சுயநலமியும் கூற முடியாது. அன்றி பிறன் நமக்கு ஒன்றும் கொடுக்காத போது பிறனுக்கு நாம் கொடுக்கத்தான் வேண்டு மென்பதும், நாம் கொடுககாதபோது பிறர் நமக்குக் கொடுக்கத்தான் வேண்டு மென்பதும் வேத விதிப்படி சமமான தர்மம் இல்லை. ஆகவே இம்மறைமொழி இக்காலத்தில் தான் கண்டதெனப்படும் சமதர்மத்தை அழகாய் வற்புறுத்துகிறது. **வேதத்தில் சமதர்மம்.**

## மோக்ஷம் என்றால்.

யத்ர ஆனந்தாஸ்ச மோதாஸ்ச முத : ப்ரமுத ஆஸதே
காமஸ்ச யத்ர ஆப்தா : காமா : தத்ர மாம் அமிர்தம்
க்ருதி
(ருக். 9-113-11)

(பொ-ள்) எங்கே ஆனந்தமும் இனிமையும் பெற முடியுமோ, எங்கே சகல விருப்பங்களும் நிறைவேறுமோ அவ்விடமாம் அமிர்தம் எனக்குண்டாகட்டும்.

ஆஹா! "இந்திய வேதங்களில் என்ன இருக்கிறது? மரித்தபின் எங்கோ பரலோகத்திலே மரித்தவர்கள் சென்று இருப்பார்களாம். அதற்குத்தான் மோக்ஷமென்று பெயராம், அதை நாடித்தான் இந்துக்கள் தங்கள் இகலோக வாழ்வை சீர்படுத்திக்கொள்ள முயற்சிசெய்யாமல் கண்மூடித்தனமாய்க் கண்டவைகளைச் செய்து வருகின்றனர்" என்று ஏளனம் செய்து வந்தவர்கள் தயவு செய்து இம்மொழியைப் பார்க்கட்டும் ஆனந்தம், விரும்பிய விருப்பங்கள் நிறைவேறல், இது தான் மோக்ஷம் என்று வேதங்களில் தெளிவாய்க்கூறியிருக்க அறியாமல் குறைகூறுவோர்களை என்னெனலாம் "ஒருவன் மோக்ஷத்தை அடைந்தான்" என்றால் அவன் இவ்வுலகிலே மாறாத சந்தோஷத்தைப் பெற்று, விரும்பிய விருப்பங்களனைத்தும் நிறைவேறும் நிலையை அடைந்தான் என்றுதான் பொருள் என்று இவ்வேத வாக்கால் நன்கு விளங்குகிறது

இதுவரை மனித விருப்பங்களையும் அவைகளின் நிலைகளையும் அவைகள் நிறைவேறப்பெறுவதே மோக்ஷம் என்பதையும் கண்டோம். விருப்பங்கள் நிறைவேற வேண்டுமானால் மனிதனுக்குச் சில துணைகளும் அவற்றின் உதவியும் வேண்டும். இத்துணைநிலையை முன்னோர்கள் இல்லறம் என்ற பெயரால் அழைத்தனர். ஆகவே வேதத்தில் இல்லறத்தைக்குறித்து என்ன சொல்லப்பட்டிருக்கிறது என்பதைக் காண்போம்.

## இல்லறத்தார்.

இகை வஸ்தம் மா யௌஷ்டம் விஸ்வ மாயுர்
வியஸ்னுதம்
க்ரீடந்தௌ புத்ரைர் நப்துரு பி மோத மானௌ
ஸ்வே க்ருஹே (ரிக். 10 85-42)

(பொ-ள்) விரோதமின்றி, இல்லத்திருந்து, பூர்ண ஆயுள் பெற்று, பிள்ளைப் பேரன்களுடன் விளையாடிக் களித்தவாறு சொந்த வீட்டில் வசித்திரு.

இல்லறம் நல்லறமாக வேண்டுமாயின் இல்லம் சொந்தமாய் இருப்பது அவசியம். இல் இன்றேல் இல்லின் அறம் எப்படிச் சிறக்கும். மக்கள் சொந்த இல்லம் பெற்றவர்களாய் இருக்க வேண்டுமென்பது மறை வாக்கு.

## மனையமைப்பு.

ஊர்ஜஸ்வதி பயஸ்வதி ப்ருதிவ்யாம் நிமிதாமிதா
விஸ்வான்னம் பிப்ரதீ ஸாலே மாஹிம்ஸீ: ப்ரதி
க்ருஹ்ணத:
த்ருணைராவ்ருதா பலதான வஸானா ராத்ரீவ ஷாலா
ஜகதோ நிவேஸனீ
மிதா ப்ருதிவ்யாம் திஷ்டஸி ஹஸ்தினீவ பத்வதீ
(அதர். 9-3-16-17)

(பொ-ள்) உயர்ந்ததும், பால் பண்ணைகொண்டதும், ஓர் பால் நீர் நிரைந்ததும், புற்கள் நிரைந்து கொடித்தோரணங்களால் அலங்கரிக்கப்பட்ட வீடு, பூமிமேல் யானையைப்போல் நின்றிருக்கிறது.

"பங்களா வீடுகளை அமைக்க இந்தியர் தெரிந்திருக்கவில்லை. மண்ணாலும், ஓலைகளாலும் ஆன குடிசைகளையே இந்தியர் தெரிந்திருந்தனர்," என்ற சில நவீன நாகரீகர்களின் கூற்றுக்கு எதிராய் இம்மறைமொழி மிளிர்கிறது. இதன் வர்ணனையிலிருந்து இது ஓர் சிறந்த பங்களாவாகத்தானிருக்க வேண்டுமென்பதை யார் மறுக்க முடியும்? ஆகவே சிறந்த மனைகளை அமைப்பதும் வேத வித்தையே.

## மாடி வீடு.

யா த்விபக்ஷா சதுஷ்பக்ஷா ஷட்பக்ஷா யானி மீயதே
அஷ்ட பக்ஷாம் தசபக்ஷாம் ஸாலாம் மானஸ்ய பத்னீம்
அக்னிர் கர்ப்ப: இவாஸயே (அதர். 9-3-21)

(பொ-ள்) இரு அடுக்கு, நாலடுக்கு, ஆறடுக்கு, எட்டு, பத்து அடுக்குகளாய்க் கட்டிய மரியாதைக்குறிய இல்லத்தில் நான் கர்ப்பத்தின் சூட்டிற்குச் சமமாய் வசிக்கிறேன்.

அமெரிக்க மக்கள்தான் பலமாடிமனைகளையமைக்கத் தெரிந்தவர்களோ? அப்படி நம்புவோர்கள் இம்மறைமொழிக்கு என்ன கூறுவர். அழகிய மாடிமனைகளை அமைப்பதும் வேதக்கல்வியே.

## விருந்தோம்பல்.

ஊர்ஜ்ஜம் பிப்ரத் வஸுவனி: ஸுமேதா அகோரேண
சக்ஷுஷா மித்ரியேண

க்ருஹானேபி : சுமனு வக்தமானோ ரமத்வம்
மா பிபீதமத்
இமே க்ருஹா மயோ புவ ஊர்ஜஸ் வந்த : பயஸ் வந்த :
பூர்ணவாமேன திஷ்டந்த : தேனோ ஜானந்தி
ஆயத :
ஏஷாம் அத்யேதி ப்ரவஸன யேஷு ஸௌ
மனஸோ பஹு : (அதர் 7-60-1-2)

(பொ-ள்) அறிஞர்களே! நீங்கள் என் இல்லில் அன்புடன் வாருங்கள். அஞ்சாதீர், என் மனை வருபவற்கு பலம் தரும் பால் உணவு முதலிய பொருள்களைக் கொண்டிருக்கிறது.

வரும் விருந்தினரை கடுமுகத்துடன் நோக்கும் தற்கால இல்லறத்திற்கும், வாரா விருந்தினரை வருந்தியழைக்கும் வேத முறை இல்லறத்திற்கும் என்னே வேற்றுமை!

## கடனின்மை.

அன்ருணு அஸ்மின் நான்ருணு : பரஸ்மின் த்ருதியே
லோகே அன்ருணு : ஸ்யாம
யே தேவயானு பித்ருயானுஸ்ச லோகா : சர்வான்
பதோ அன்ருணு ஆட்சி யேம (அதர். 6. 117. 3)

(பொ-ள்) இகபர உலகங்களிலும் தேவர்கள் பித்ருக்கள் ஆகிய அனைவரிடமும் கடனின்றி வாழ்வோம்.

ஒருவரிடத்தில் திருப்பியளிப்பதாகக் கூறிப் பெருவதைத் தான் தற்கால மக்கள் கடன் என நினைக்கின்றனர் ஆனல் வேதமோ; பிறவியிலேயே மனிதன் பலவகைக்கடன்களுக்கு உட்பட்டிருப்பதாகவும் வாழ்க்கையில் ஒவ்வொருவரும் அதைத்தீர்க்கக் கடமைப்பட்டுள்ளன ரென்றும் கூறுகிறது. மனிதனுக்கு உண்மையில் சொந்தமானது எதுவுமில்லை. மனிதனின் உடல்கூட பெற்றோர்களால் அளிக்கப்பட்டதுதான். கல்வியோ ஆசானல் உதவியது. அவன் சுவாசிக்கும் காற்றும் இயற்கை கொடுத்தது. தனக்கு இப்பேருதவிகளைச் செய்தவருக்குச் சேவை செய்யும் இயற்கைக்கடனுக்கு மனிதன் உட்பட்டிருக்க வில்லையா? ஆகவே வாழ்க்கையில் ஒவ்வொருவரும் தன் பெற்றோர்களுக்கும், ஆசானுக்கும், இயற்கைக்கும், கடவுளுக்கும் பட்டிருக்கும் கடனைத் தீர்க்கக் கடமைப்பட்டுள்ளனர்: பெற்றோர் கடனை அவர்களின் கிழப்பருவத்தில் புரியும் சேவையாலும், ஆசானின் கடனை தான் கற்ற கல்வியை பிறருக்குக் கற்றுக் கொடுப்பதனுலும்,

இயற்கையின் கடனை வேள்விகள் புரிந்து நெருப்பு, நீர், காற் றுதிகளை சுத் செய்வதாலும், கடவுளின் கடனை அவர் மக்களா கிய ஜீவராசிகளுக்குச்செய்யும் தொண்டினுலும் நீக்கிக் கொள்ள வேண்டும் என்பது வேத உபதேசம். கடன் கொடியது, அதற்கு மனிதன் உள்ளாகலாகாது என்பதற்கு இதைவிடச் சிறந்த மேற் கோள் உலகின் எந்த நூலிலாகிலும் கிடைக்குமோ !

இனி இல்லறத்தில் ஒருவருக்கொருவர் எப்படி ஒழுக வேண்டுமென்ற விவரங்களைக் கவனிப்போம்.

## குடும்பத்தார்.

*அனுவ்ரத: பிது : புத்ரோ மாத்ரா பவது சம்மனு*
*ஜாயா பத்யே மதுமதீம் வாசம் வதது ஸாந்திவான்*
*மா ப்ராதா ப்ராதரம் த்விச்சன் மா ஸ்வஸார*
*முதஸ்வஸா*
*ஸம்யன்ச : ஸவ்ரதா பூத்வா வாசம் வதத பத்ரயா*
(அதர் 3-30-2-3)

(பொ-ள்) மகன் தாயின் விருப்பத்திற்கு உகந்தவனுகவும், தந்தையின் உத்திரவுகளுக்குக் கீழ்ப்படிபவனுகவும் இருக்கவேண் டும் ; மனைவி, மணுளனிடம் எப்போதும் அமைதியாக இனிய வார்த்தைகளாடட்டும். அண்ணன் தம்பிகளுள் வெறுப்புக் கூடாது. தங்கை தமக்கைகளிலும் வெறுப்புவேண்டாம். அனை வரும் ஒருவருக்கொருவர் அன்பும் ஆதரவுமான வார்த்தைகளால் பேசிக்கொள்ளட்டும்.

இம் மறைமொழியின்படி ஒழுகும் இல்லத்தில் மாறு இன் பமே எப்போதும் குடிகொண்டிருக்குமெனச் சொல்ல வேண் டுமா ? இவ்வளவு சிறந்த இல்லற ஒழுக்கத்தை வேதமே சொல் லும்.

## உறவினர்.

*ஸஸ்து மாதா ஸஸ்து பிதா ஸஸ்து ஸ்வா ஸஸ்து*
*விஷபதி :*
*ஸமந்து ஸர்வே ஞாதய : ஸஸ்து அயம் அபிதோ ஜன :*
(ருக். 75-5-5)

(பொ-ள்) தாய், தந்தை, உறவினர், வேலையாள், நண்பர்கள், பசு முதலிய வீட்டு மிருகங்கள் எல்லாம் என்மனையில் சுகத்துடன் தூங்கட்டும்.

## மனிதப்பொது.

*ஸமானீ ப்ரதா ஸகவோன்ன பாக:*
*ஸமானே யோக்தே ஸஹயோ யுனஜ்மீ*
*ஸம்யஞ்சேதக்னிம் சபர்யதாரா நாபி மிவாபித:*
(அதர். 3-30-6)

(பொ-ள்) எல்லா மனிதர்களின் இடமும் ஒரே சமானமாகட்டும். எல்லா அன்னத்தையும் ஒரே சமமாய்ப் பங்கிடு. ஒரே குடும்ப பந்தனையில் எல்லா மனிதர்களையும் காண்கிறேன்.

வேதப் பொதுவுடைமையின் விளக்கவுரை! எதிர்கால உலக அரசியல் இப்பொதுவுடைமை கொண்டதாக இருக்கவேண்டுமென்றல்லவோ இற்றைக்காலப் பொதுநோக்குலகம் விரும்புகிறது! இதனினும் சிறந்த மனித சமுதாயத்திற்கு நன்மை பயக்கும் கொள்கை வேறென்னயிருக்கும்? பொதுவுடைமை வாதிகளே! இதோ, உமதுகொள்கை உமக்கு ரஷ்யதேசம் அளித்ததென்று நினையாதீர், அதன் வாயிலாக வேதமே அளித்ததென இப்போதாயினும் உணருங்கள். வேதத்தை அடிப்படையாய்க்கொண்ட ஸ்வராஜ்ய இந்தியா இப்பொதுவுடைமைபெற்றதாயிருக்குமென இனிச்சொல்ல வேண்டியதில்லை யல்லவா?

## உயிர்வாழ்வன.

*மித்ரஸ்யாகம் சக்ஷுஷா ஸர்வானி பூதானி*
*சமீக்ஷந்தாம்*
*மித்ரஸ்ய சக்ஷுஷா ஸமீக்ஷாமஹே* (யஜுர். 36-18)

(பொ-ள்) உலகின் எல்லா உயிரினங்களையும் நான் அன்புப் பார்வையுடன் நோக்க, அவைகளும் என்னை அவ்வாறே நோக்குமாக.

இதை விடச் சிறந்த அஹிம்சாதர்மம் உலகில் எக்காலத்திலாயினும் தோன்றியதுண்டா? புத்தர்பிரான் முதல்

மகாத்மா காந்தியார் வரை உலகில் தோன்றிய எல்லா அஹிம்சா தர்மவாதிகளின் தர்மமும் இம்மறைமொழியினின்றே கொள்ளப் பட்டதென்பதில் என்ன ஐயம்?

குடும்பம் முதல் ஜீவராசிகள் ஈராக கூறப்பட்ட இவ்வில்லற தர்மத்தை நீதி நெறிகளை நன்குணர்ந்த மக்களே பரிபாலிக்க முடியும். நீதிக்குக் கட்டுபடாதவன் தன் னில்லத்தாருடன் நியாயமாக ஒழுகமாட்டான். ஆகவே வேதத்தின் நீதிமுறை களிற் சிலதை ஆராய்வோம்.

## உண்மை

*அக்னே வ்ரதபதே வ்ரதம் சரிஷ்யாமி தச்சகேயம்*
*தன்மே ராத்யதாம்*
*இதமக மன்ருதாத் சத்ய முபைமி* (யஜுர். 1-5)

(பொ-ள்) பரமா! நான் என் முழுத்திறனையும் கொண்டு பொய்யை விலக்கி மெய்யைக் கொண்டு ஒழுகுவதாய் உறுதி கூறுகிறேன்.

வாழ்க்கையின் இன்பத்தைப்பெற மனிதன் கொண்டுள்ள திறன் அனைத்தையுமே உண்மைக்கு ஒப்படைத்துவிடுவதென் றால் இனி அவன் ஒழுக்கம் உயர்வடையுமென்ற உறுதி வேண்டுமா? உண்மையின் முதிர்ந்தநிலை!

## இன்சொல்.

*ஜிஹ்வயா அக்ரே மது மே ஜிஹ்வாமூலே மதூலகம்*
*மமே தஹக்ரதா வஸோ மமசித்த முபாயஸி:*
*மதுமன்மே நிஷ்க்ரமணம் மதுமன்மே பராயணம்*
*வாசா வதாமி மதுமத் பூயாஸம் மது சம்த்ருஷ:*
(அதர் 1-34-2-3)

(பொ-ள்) என் நாக்கின் மேலும், கீழும் இனிமை இருக் கட்டும். என் எல்லாக்காரியங்களிலும் இனிமை வசிக்கட்டும். என் சொற்கள் இனிமையாகி யான் இன்பமே வடியாய் இலங் கட்டும்.

இவ்வினியநிலையை மனிதன் பெறக்கூடுமானால் அவனுக்கு இவ்வுலகனைத்தும் உள்ளிருக்கும் பொருள்களுடன் ஒரே இன்பக் கடலாய் ஆத்மாவுக்கு நிலையான இன்பம் பயப்பதாய் இனிக்கும் என இயம்பவேண்டா.

## மதுவிலக்கு.

ஹ்ருத்ஸு பீதாஸோ யுத்யந்தே துர்மதாஸோ
நஸுராயாம்
ஊதர்ன நக்நா ஜரந்தே (ருக்- 8- 2- 12).

(பொ-ள்) குடிகாரர் தங்களுக்குள் கலகம் விளைவித்துக் கொள்வர். நிர்வாணமாய் வீண் கூச்சலிடுகின்றனர். குடி கூடாது.

மனிதனுக்கு உயிரினும் சிறந்தது மானம். "மான மழிந்த பின் வாழாமை முன்னினிதே" — யென்பது ஆன்றோர் வாக்கு. நிர்வாணம் மானம் இழந்த நிலை அந்நிலையை, குடி உண்டாக்குமாயின் அதைவிட மனிதனுக்கு மானத்தைப்போக்கும் இழி தொழில் வேறில்லையென்று இம்மறைமொழி குடியின் தீமையை தீமைகளின் தாயகமாய் விவரிக்கிறது.

## சூதாட்டம்

ஜாயா தப்யதே கிதவஸ்ய ஹீநா மாதா புத்ரஸ்ய சரத:
க்வசித் ருணவா விப்யத் தன மிச்சமானோ
ன்யேஷாம் அஸ்த உபநக்த மேதி (ருக். 10-34-10)

(பொ·ள்) சூதாடியின் மனைவி எப்பொழுதும் பணக்குறைவால் வருந்துகிறாள். அவன் தாய் சதா அழுகிறாள். அவன் உள்ளம் கடனால் அச்சமுறுகிறது. பணமுடையால் அவன் திருட்டுப் பாவத்தையும் செய்ய நேரிடுகிறது.

சூதாட்டத்தில் தன் வாழ்நாளின் பெரும் பாகத்தைக் கழித்தவனும், தன் பெற்றோர்களின் சேமிப்பில் பெரும் பகுதியை இழந்தவனுமான ஒருவன் கடைசியில் நல்வழியில் திருந்தி தன் பழயநிலையை கூறத்துணிவானேல்கூட, இவ்வளவு, சூதாடிகளும் உடனே திருந்தும் பயங்கர நிலையில் கூற முடியாது

## திருடு.

யே அமாவஸ்யாம் ராத்ரிம் உதஸ்து வ்ராஜ மந்திரிந:
அக்னிஸ் துரீயோ யாது: ஸோ அஸ்மப்யம்
அதிவ்ரவத் (அதர். 1-16-1)

(பொ-ள்) திருடர்கள் இருக்கும் ஊரில் ஜனங்கள் அரச காவலாளர்களால் எச்சரிக்கை செய்யப்படுகின்றனர். அன்றி திருடர்கள் கிடைத்த உடன் தண்டிக்கப்படுகின்றனர்.

மக்கள் தம் இனத்தவரைக் கண்டு அஞ்ச வேண்டியதில்லை. மனிதன் பயப்படுவது அவன் ஆற்றலைக் குலைத்துக் கொல்லும் துஷ்ட மிருகங்களைக் கண்டே. ஆயின், திருடர்களைக் கண்டு மக்கள் எச்சரிக்கை செய்யப்படுகின்றன ரென்றால் திருடர்கள் மிருகங்களுக்குச் சமமாக மதிக்கப்படுகின்றனர் என்பது புலனாகிறது. ஆகவே திருட்டுத்தொழில் மிருக குணம் என்று மறை முறையிடுகிறது.

## சுத்தம்.

அத்பிர் காத்ராணி சுத்யந்தி மன : சத்யேன சுத்யதி
வித்யா தபோப்யாம் பூதாத்மா புத்திர் ஞானேன
சுத்யதி (யஜுர்)

(பொ-ள்) நீரால் உடலும், உண்மையால் மனமும், கல்வி தவங்களால் ஆத்மாவும், புத்தம் புதிய அறிவின் சேர்க்கையால் புத்தியும் சுத்தமடைகிறது.

வெளிப்பகட்டுகளால் பயனில்லை. மனதும் அறிவும் இருள் கொண்டிருக்க, வெறும் உடலைமாத்திரம் பன்முறை நீராட்டித் துலக்குவதால் மனிதன் யாதொரு நன்மையும் பெறான். உள்ளும் புறம்பும் சுத்தி செய்யப்படுவதாலேயே மனிதவாழ்க்கை புனிதமாகும். எதையெதை எவ்வெதனால் புனிதமாக்கலா மென்பதை இம்மந்திரம் கூறுகிறது.

இந்நீதிமுறைகள் மனிதன் குழந்தைப் பருவத்திலிருக்கும் போதே அவன் உள்ளத்தில் பதியப் பெறாவிட்டால் வாழ்கையில் கொண்டொழுகமாட்டான். யாதொரு நன்மை தீமையும் அறியா பச்சிளங் குழவியின் இள மனதில் எது பதியப்பெறுமோ அதுவே அவன் பிற்கால வாழ்க்கைமுறைகளுக்குக் காரணமாகும். ஆகவே இல்லறத்திற்குமுன் மக்கட் பணியைச் செவ்வனே தெரிந்து கொள்ள வேண்டிய தவசியம். வேதத்தில் இல்லறத்திற்கு முற்பட்ட மனித ஒழுக்கத்தினைக் காண்போம் :—

## மணத்திற் குரியர்.

தமஸ் மோரா யுவதயோ யுவானம் மர்ம்ருஜ்யமானு
பர்யந்த்யாப :
ஸ ஸுக்ரே பி : வீக்கபிரேவதஸ்மே தீதா யா
நித்மோ க்ருதநிர்ணி கப்ஸு (ருக். 2-35-4)

(பொ-ள்) பெண்கள் இருபதிலிருந்து இருபத்திநாலுவயதிற்குள் சிறந்த பிரம்மசரியத்தை அனுசரித்து, நல்ல கல்விகளைக்கற்றுத் தங்களிலும் $1\frac{1}{2}$ அல்லது 2 பங்கு வயதுடைய பிரம்மசரியத்தை யனுசரித்த வீரபுருடனை மணக்கவேண்டும். ஆண்கள், 30-க்குமேல் 35-க்குள் உறுதியாகப் பிரம்மசரியத்தை அனுசரித்து கல்வியில் தேர்ச்சிபெற்று, கல்வியிலும், பிரம்மசரியத்திலும் தேர்ச்சிபெற்ற 20—24 வயது வீர ரமணியை மணக்கவும்

"நோயற்ற வாழ்வே குறைவற்ற செல்வம்" எனும் முதுமொழி இன்று பொய்யாகி மக்கள் சதா நோய்வாய்ப்பட்டு உலக வாழ்கையின் இன்பங்களைச் சிறிதும் நுகரப்பெறாதவர்களாய் அற்ப ஆயுளில் மரிக்கக்காரணம் விளங்கியது. உடல் உறுதிபெறா இளம் வயதில் இல்லறத்தை மேற்கொள்ளும் மக்கள் எப்படி நோயின்றி வாழமுடியும். அப்படிப்பட்ட இளமனப் பெற்றோர்களுக்குப் பிறக்கும் மக்கள் உடல், உள்ள வலிமையை எவ்வாறு பெற்றிருப்பர். இந்தியப்பெருநாட்டின், இல்லையில்லை, உலகின் ஆயுளும் அறிவும் குன்றியதற்கு இவ்வேதமொழியின் விதியை மக்கள் புறக்கணித்ததே காரணம். மருத்துவ, விஞ்ஞான, தத்துவ ஆராய்ச்சியின்படி வலுவுடைப் பெற்றோர்களே நன்மக்களை உலகிற்களிக்கமுடியும். உலகம் மறுபடி தன் வேதகால நிலைக்கு மாறி உய்யுமாக.

## காதல் மணம்.

கியதி யோஷா மர்யதோ வதூயோ : பரிப்ரீதா
பண்யஸா வார்யேன,
பத்ரா வதூர்பவதி யத் ஸுபேஷா : ஸ்வயம்
ஸாமித்ரம் வ்ருணுதே ஜனேசித் (ருக்-10-27-12)

(பொ-ள்) மணம் செய்யும் பருவமடைந்த தெரிவையர்கள் ஆண்களின் சமூகத்திலிருந்து தம் மனதுக் கொத்த மணாளரைத் தாமே தெரிந்தெடுத்துக் கொள்கின்றனர்.

தமிழ் நாட்டின் காதல் மணமுறை வேதத்தில் இம்மியும் வேறுபாடின்றி மொழியப்பட்டிருக்கின்றதன்றோ! இம்மணச் சிறப்பை இக்கால உலகில் விரித்துக்கூறத்தேவையில்லை யென நினைக்கிறோம்.

## மணமகன்.

க்ருஹ்ணமி தே ஸௌபகத்வாய ஹஸ்தம் மயா பத்யா
ஜரதஷ்டிர் யதாஸ :

பர்கோ அர்யமா ஸவிதா புரந்திர் மஹ்யம் த்வாதுர்
கார்ஹ பத்யாய தேவா :

(அதர். 14-1-50)

(பொ-ள்) தேவர்கள் முன்னிலையில் உன்னை வாழ்க்கையின் மேன்மையின் பொருட்டு என் இல்லறத்துணைவியாய் ஏற்றுக் கொள்கிறேன். கிழப்பருவம்வரை நாம் கூடிவசிப்போம்.

இன்று மணம் ; நாளை ரத்து ; என்ற தற்கால மேனாட்டு மண முறையையும் இவ்வேத மணமுறையையும் சீர்தூக்கிப்பார்த்து அறிஞர்கள் காதல்மணம் எது என்பதை அறிவார்களாக. சின் நாட்கள் கூடி வாழ்வது அன்பின் அறிகுறியா, அல்லது வாழ்க்கை முழுதும் ஒன்றாய்க்கழித்தல் அன்பின் பெருக்கா ? என்னே வேதத்தின் இன்பக்காதல் மணம்.

இதுவரை யாம் வேதங்களிற் பொதிந்து கிடக்கும் மனித வாழ்க்கைக்குறுபயன் பயக்கும் அரிய விடயங்களிற் சிலதை மாத் திரம் ஆராய்ந்தோம். இஃது வேதக்கடலின் ஓர் துளி யென லாம். நவீன நாகரீகத்தில் தோன்றிக்கிடக்கும் இயந்திர சாதனங் கள் செய்முறைகளும் ; தற்கால விக்ஞானிகளே புதியதாய்க்கண்டு பிடித்தனரென நினைத்திருக்கும் வான, ஜோதிட, பூகத்துவ, இரசாயன, தத்துவ, தாவர, பிராணி சாஸ்திரங்களின் முறைக ளனைத்தும் மனித சமூகத்தின் ஆதிநூலாம் வேதத்தில் செவ்வனே கூறப்பட்டிருக்கின்றது, என்றுயாம் சொல்லத்துணிந்தால் பெரும் பாலோர் நம்பமாட்டார்க ளென்பதை யாமறிவோம். ஆயினும், தமிழன்பர்களின் பேருதவி எமக்குண்டாயின் மற்றும் பல நூற் கள் வாயிலாக இவ்வுண்மையை யாம் நிரூபிக்க முடியுமென்ற நம்பிக்கை எமக்குண்டு.

தமிழ் மக்கள் தம் மொழியின் வளர்ச்சிக்காக வெளியிடப் படும் இம்முயற்சிக்கு ஆதரவளிப்பதின் மூலம் தங்கள் தமிழ் ஆர்வத் தைத் தெரிவித்துக்கொள்ள முன்வருவரேல் சில ஆண்டுகளுக் குள் தமிழ் நாடெங்கும் மணங்கமிழும் தமிழ்வெள்ளம் பெருக்கெடுத்துப் பாயும் என்ற உறுதியுடன் எல்லாம் வல்ல இறைவன் இன்னநாள் தோன்றத் தன்திருவருள் புரிய வேண்டு மென இறைஞ்சுகின்றோம்.

வாழ்க தமிழ் ! வாழ்க தமிழர் !!

---

# Balaji & Bros.,

## SHAROFF & ACID MERCHANTS,

## MAIN BAZAAR, VELLORE. N.A.

அசல் பொன், வெள்ளி நகைகள்

உத்திரவாதத்துடன் செய்து கொடுக்கப்படும்.

திராவகத்தினல் மட்டப்பொன்,

வெள்ளியைச் சுத்தம் செய்து கொடுக்கப்படும்.

ஆர்டர்களைக் குறித்த காலத்தில்

செய்து கொடுக்குமிடம் :—

## K. பாலாஜி & பிரதர்ஸ்,

ஷராப் & திராவகக்கடை,

மெயின் பஜார், வேலூர்.

---

வேலூர் ஹரி ஹர அச்சுக்கூடத்தில் பதிப்பிக்கப்பட்டது.